# வஹ்ஹாபியாக இருந்தால் என்னவாம்!

காயல்பட்டணம், காமில் வலி
ஸதக்கத்துல்லாஹ் அப்பா (றலி) அவர்களது தம்பி
காமில் வலி ஸாம் ஷிஹாபுத்தீன் (றலி) அவர்களுடைய
மூலப்பாடலும் கருத்துரை விளக்கமும்.

மீரான் பதிப்பகம்
காயல்பட்டணம்

1388 :: 1968

## முன்னுரை

‘‘எங்கள் நாயனே! சத்தியத்தை சத்தியம் என்பதாக நாங்கள் உணர்ந்து அந்தச் சத்தியத்தை நாங்கள் பின்பற்றி ஒழுகி நடக்கும்படியாக உண்மையை உணர்த்தி நேர்வழி காட்டியருள்!

மேலும், அசத்தியத்தை அசத்தியம் என்பதாக நாங்கள் உணர்ந்து அத்தகைய அசத்தியத்தை விட்டும் நாங்கள் தவிழ்ந்து நடக்கும்படியாக விளக்கப்படுத்தி நேர்வழி காட்டியருள்’’

—ஆமீன்.

பேரன்புடையீர்,

வஸீலாக் கூடாது, மவ்லிது ஓதுவது கூடாது, கத்தம் பாத்திஹா ஓதுவது கூடாது, யாறஸூலல்லாஹ் – யாமுஹிய்யத்தீன், யாகாஜா என்றெல்லாம் அவுலியாக்களை, நபிமார்களை அழைத்து உதவி தேடுவது கூடாது, ஷபாஅத்து என்பதெல்லாம் வெறும் பேச்சு, நாயகம் (ஸல்) அவர்களுக்கு மாத்திரம் தனிப்பெரும் அந்தஸ்து என்ன, அவர்களும் நம்மைப் போல மனிதர் தானே என்றெல்லாம் சில ஜனங்கள் கூறி வருவதைக் கேள்வியுறுகிறோம். இவர்களின் இவ்வார்த்தைகளைக்கேட்டு மனம் வெதும்புவாருண்டு, ரத்தக்கண்ணீர் வடிப்பார் உண்டு. அறியாத் தன்மையிலுள்ள அற்ப ஜனங்கள் சிலர் இவ்வார்த்தையைக் கேட்டு மகிழவும் செய்கிறார்களாம்! அல்லாஹு அக்பர்!

அவ்வாறுகக் கூற முற்பட்டிருக்கும் அவர்களும், அவர்களது வார்த்தைகளைக் கேட்டு மகிழ்ந்து அவர்களது சொற்களை ஏற்றுநடக்கும் அந்த ஜனங்களும் எத்தகையவர்கள் என்ற உண்மை விளக்கத்தை, சத்தியப் பிரகடனத்தை, மேன்மை மிக்க ஸாம்ஷிஹாபுத்தீன் வலியுல்லாஹ் நாயகம் (றலி) அவர்கள் ‘வஹ்ஹாபிப் படலம்’ என்ற தலைப்பில் விளக்கித் தருகிறார்கள்.

கவனமுடன் நோட்டமிடுங்கள்! உண்மையை உணருங்கள்! நன்மையை நாடுங்கள்! நல்லாருடன் சேர்ந்திருங்கள்! சான்றோர்களோடு சார்ந்திருங்கள்!

ஈமான்தான் மிகப்பெரிது, ஈமான் ஸலாமத்துடன் நாம் ஜெயம்பெறவேண்டும், ஈமானைப் பறிப்பதற்கு பல கோலங் களில் பல வேஷங்களில், பல பெயர் லேபிள்களுடன் ஷைத் தான்களின் ஏஜண்டுகளான வழி கெட்ட கூட்டத்தார்கள் அநேகம் பேர் வருவார்கள்! ஜாக்கிரதை!

பெயரைக் கண்டு மயங்காதீர்கள்! வெளிக் கோலத்தால் ஏமாந்து விடாதீர்கள்! நல்ல பாம்பு அழகிய படமெடுத்து ஆடத்தான் செய்யும்! எச்சரிக்கையோடிருக்க வேண்டு மல்லவா?

அழகிய பளிங்குப் பாத்திரத்தில், அமிர்தம் என்ற லேபிளை ஒட்டி, அதனுள்ளே பாஷாணத்தை வைத்துத் தரப் பட்டால் தூக்கி வீசி எறிந்து உடைப்போமல்லவா?

அது போல நல்லவர்கள் யார், பொல்லாதவர்கள் யார் என்ற பாகுபாட்டை அகமும், புறமும், பரிசுத்தமடைந்த அகமியக் கல்வியைப் பெற்றிருக்கக் கூடிய காமிலீன்களான பெரியோர்களிடம் கேட்டறிந்து அவர்களிடம் நெருங்கிப் பழகி அவர்கள் மூலம் ஹிதாயத்து எனும் நேர்வழியில் இஸ்த்திகாமத்து எனும் அசைவற்ற தரிபாடான நிலையைப் பெற வேண்டும். ஹக்கு (சத்தியம்) எது? பாத்தில் (அசத்தியம்) எது என்பதை வாக்கும் மனமும் ஒத்த அத்தகைய பெரியோர்களே விளங்கி இருப்பார்கள், அவர்களே நமக்கு விளக்கித் தருவார்கள். அதை நாம் மனமொப்பி ஏற்று அவர்களைப் பின்பற்றி நடத்தல் வேண்டும். அதுவே ஈடேற்றத்திற்குரிய முக்திப்பாதை,

எனவே, சகோதரப் பெரியார்களே! தாய்மார்களான சகோதரிகளே!

'வஹ்ஹாபிப் படலம்' என்ற பாடலை இயற்றியவர்கள் சாமானிய மனிதரல்ல. ஸதக்கத்துல்லாஹ் அப்பா (றலி) அவர் களுடன் கூடப் பிறந்த தம்பி. சன்மார்க்க விளக்கம் பற்றி ஆயிரம் மாலை பாடியவர்கள். அவர்களது அந்தப் பாடலுக்கு அரும்பத விளக்கமுடனும், கருத்துரைகளுடனும் இந்நூலை '**வஹ்ஹாபியாக இருந்தால் என்னவாம்!**' என்ற தலைப்பில் அளித்துள்ளோம்.



யார் யாரிடம் இந்தக் கொள்கைகள் குடிகொண்டுள்ளன வோ, யார் யார் இந்தக் கொள்கையைப் பரப்புகின்றார்களோ அவர்கள் எத்தகையவர்கள்? அவர்களுடைய ஈமான் தரிபடுகிறதா? அல்லது பறிபோகிறதா? அவர்கள் முஸ்லிம் களுடைய கூட்டத்தார்களோடு சேர்த்து மதிக்கப்படுவார்களா? அல்லது வேறு சாதியாக கணிக்கப்படுவார்களா என்ற விபரங் களை எல்லாம் இதில் அப்பா அவர்கள் விளக்கித்தருகிறார்கள்.

அல்லாஹ்வின் அவுலியாக்களான ஸாம்ஷிஹாபுத்தீன் (றலி) போன்ற நாதாக்களுடைய சொல்லை நாம் ஏற்று நடக்க வேண்டுமா? அல்லது தான் தோன்றித் தனமாகப் பேசிவரும், புல்லுருவிகளான புதிய புதிய கூட்டத்தார்களின் வார்த்தையை ஏற்று நடக்க வேண்டுமா? எதில் நமக்கு இகத்திலும், பரத்திலும் வெற்றியுண்டு? என்பவைகளை நாம் உணர்ந்து தெளிந்து, நமது சகோதர சகோதரிகளுக்கும், அன்பர்களுக்கும் அவற்றை உணரச் செய்து நாமும், நமது சகோதர சகோதரிகளும் அன்பர்களும் ஈடேற்றம் பெற, ஈமானைப் பாதுகாத்துக் கொள்ள, நபிமார்கள், ஸித்தீக்கீன்கள், ஷுஹதாக்கள், ஸாலிஹீன்கள், அவுலியாக்கள் ஆகியோர் களுடன் நாளை மறுமையில் நாம் சுவனபதியில் இன்புற்றிருக்க இந்நூல் வழிகாட்டுமாக. ஆமீன்! வஸ்ஸலாம்.

14—1—1388 }
13—4—1968 }

மீரான் பதிப்பகம்,
காயல்பட்டணம்.

---

இந்நூல் தேவையானவர்கள் 50 பைசா தபால் முத்திரை பின்வரும் விலாசத்திற்கு அனுப்பிக் கொடுத்து தனிப்பிரதி பெறலாம்.

---

A. K. மீரா சாஹிபு,
சதுக்கை தெரு,
காயல்பட்டணம்.
S. I.

# வஹ்ஹாபியாக இருந்தால் என்னவாம்!

## வஹ்ஹாபிப் படலம்

நல்ல அறிவான அகமியத்தை
நாடி யறியாத வஹ்ஹாபிகள்

பொல்லா பிதுஅத்தை ஷிருக்காமென்று
புலம்பி மனிதரைக் கலக்கமாக்கி

கல்லு புத்தோடு நபியொலியை
கலந்து பேசியே சமதியாக்கி

வெல்லு மொளிவான ஈமான்மாறி
வேறே சாதியாய்க் கெட்டார்களே. (1)

[சமதி = சமம்]

வஹ்ஹாபிகள் யார்? அவர்கள் எத்தகையவர்கள்? அவர்களுடைய போக்கு எப்படி? அவர்களுடைய கதி யாது? என்பனவற்றை மேன்மைமிக்க ஆரிபு பில்லாஹ் ஸாம்ஷிஹாபுத்தீன் வலியுல்லாஹ் (றலி) அவர்கள் இந்தப் பாடலில் நன்கு தெளிவு படுத்தியுள்ளார்கள்.

வஹ்ஹாபிகள் வெளிரங்கமான சில விஷயங்களைத் தெரிந்திருக்கிறார்களே தவிர, அகமியமான (ஹக்கீகத்து) விஷயங்களைப் பற்றி அவர்களுக்கு எதுவும் தெரியாது, அதை நாடவோ, தேடி அறியவோ நஸீபு இல்லாதவர்கள் அவர்கள்.

பிதுஅத்து, பிதுஅத்து என்று சொல்லிக் கொண்டே இருக்கும் அவர்களுத்கு அகமிய அறிவு இல்லாதபடியால் பிதுஅத்தின் வகை விபரங்களும் அவர்களுக்குத் தெரியாது. பிதுஅத்துன் ஹஸனா, அழகிய பிதுஅத்து, ஆகுமான பிதுஅத்து, புகழப்பட்ட பிதுஅத்து, வெறுக்கப்



பட்ட பிதுஅத்து, கண்டனம் செய்யப்பட்ட பிதுஅத்து, என்பன போன்றவைகளைக் கொண்டு நிதானித்து தெளிந்து ஆராய முற்படாமல் அவர்கள் ஒரே அடியாக எந்த பிதுஅத்தானாலும் அது ஷிருக்காகவே இருக்கும் என்று தப்புக் கணக்குப் போட்டு முடிவுபண்ணி தங்களை அத்தகையை கலக்கத்தில் ஆக்கியது போதாதென்று மற்ற மனிதர்களிடமும் தங்களுடைய புலம்பலை வெளிப் படுத்தி அவர்களையும் வழிகேட்டிலாக்கிக் கலக்கி விடுகிறார்கள்.

அசல் இது, போலி இது என்று பிரித்துணரக்கூடிய அம்சமும் இவர்களிடத்தில் கிடையாது. கல் என்றால் எல்லாம் கல்லே-மாணிக்கமும், மரகதமும், இரத்தினமும், கோமேதகமும், ரோட்டில் கிடக்கும் கல்லும், புத்துசிலைக் கல்லும், டேலாபிடிக்கப்படும் கல்லும் ஆகிய இவை எல்லாம் இந்த அறிவிலிகளிடம் ஒரே சம அந்தஸ்தாகத்தான் கணக்கிடப்படுகின்றன. இத்தகைய மோசமான போக்குடைய இவர்கள் கற்களால் சிலைவடிவிலாக்கப்பட்டு முஷ்ரிக்குகளால் வணங்கப் படும் புத்து, விக்கிரகங்களுக்குச் சமமாக, அல்லாஹ்வின் தனிப்பெரும் அன்பிற்குப் பாத்தியப்பட்ட நபிமார்களையும், அவுலியாக்களையும் நாத்துணிந்து கீழ்த்தரமாக கணிக்க முற்பட்டு விடுகிறார்கள்.

தவுஹீதுடைய ஜோதிப் பிரகாசத்தைத் தாங்களும் பெற்று ஏனையவர்களுக்கும் அவற்றை வாரி வழங்கும் நபிமார்களையும், அவுலியாக்களையும் மட்டரகமாக முஷ்ரிக்கீன்களின் புத்து, விக்கிரகங்களுக்குச் சமப் படுத்தி இவர்கள் பேசியதன் மூலம் இவர்கள் வெற்றியைத்தரவல்ல '**ஈமான்**' உடைய ஜோதிப்பிரகாசத்தை இழந்து, மூமின்களுடைய கூட்டத்தை விட்டும்

இவர்கள் மாறி வேறுவகையான ஒரு சாதிக் கூட்டத்தார்களாய், வஹ்ஹாபிகளாய் இவர்கள் கெட்டுச் சீரழிந்து போனார்கள் என்பதை ஸாம்ஷிஹாபுத்தீன் அப்பா அவர்கள்; மனம் கொதித்து, "வெல்லுமொளிவான ஈமான்மாறி–வேறே சாதியாய்க் கெட்டார்களே!" என்று குறிப்பிட்டுள்ளார்கள்.

வொலிமார் நபிமார்கள் தங்களுக்கே
உவந்து நேர்ந்தொரு கோழியாட்டை

அலியாம் நாயகன் இஸ்முகொண்டே
அழகா யறுத்தது ஹலாலதாகி

பொலிவா யிருப்பதை வஹ்ஹாபிகள்
பொல்லா ஹறுமென்றும் ஷிருக்குமாக்கி

வலியோன் பொருத்தக்கே டதனைப் பெற்று
வாடிக் கலக்கமாய் கெட்டார்களே. (2)

[அலியாம் = மேலாம்பரமான. நாயகன் இஸ்மு = இறைவனுடைய திருப் பெயரால் பிஸ்மில்லாஹ், பொலிவு = சிறப்பு, வலியோன் = வல்ல இறைவன்.]

அவுலியாக்கள், நபிமார்கள் பெயரால் நேர்ந்து கோழி, ஆடு முதலியவைகளை விட்டு, பிஸ்மில்லாஹ்வைக் கொண்டு அவற்றை அழகாக அறுத்து, புசிப்பது ஹலாலானதாக இருக்கத்தக்க, இந்த மதிகெட்ட வஹ்ஹாபிகள் அதுவும் ஷிருக்கு என்றும், பொல்லாத கொடிய ஹறும் என்றும் சொல்லி அல்லாஹ்வின் வெறுப்புக்கு ஆளாகி கேவலமடைந்து, குழப்பத்திலாகி, கெட்டுச் சீரழிந்து போனார்கள் என்று ஸாம்ஷிஹாபுதீன் வலி (றஹ்) அவர்கள் வஹ்ஹாபிக் கூட்டத்தாரைப் பற்றி தீர்ப்புச் செய்துள்ளார்கள்.



கனமாங் காமிலாம் ஷெய்கவரைக்
கலங்கும் வேளையில் ஒருமுரீது

மனதுதனைக் கொண்டு நாவன்றியே
மகிழ்ந்து கூப்பிட்டச் சத்தமதை

தனதுகா திறுற் ஷெய்குகேட்டு
தயவாய் ரட்சிப்பாரென்று நல்லோர்

நினைவாய் சொல்லியே வந்தசொல்லை
நீக்கி வஹ்ஹாபிகள் கெட்டார்களே. (3)

[வ-முரீதீ-இதா-தஆனீ]

"என்னுடைய அன்புச் சீடன் (முரீது) என்னை உதயகிரி (மஷ்ரிக்)யிலிருந்து அழைத்தாலும், அஸ்தகிரி (மக்ரிப்)யிலிருந்து அழைத்தாலும், ஆழிய கங்கையிலிருந்து அழைத்தாலும், வானத்திலிருந்து அழைத்தாலும் சரி, நான் உடனே அவனைக் காத்து இரட்சிப்பேன்" என்று மேன்மை மிக்க ஹஜ்ரத் கௌதுல் அஃளம் (றலி) அவர்களும், ஏனைய குத்புமார்களும், அவுலியாக்களும் சொல்லியிருக்கக்கூடிய விலாயத்தினுடைய அகமியத் தத்துவத்தின் கருத்தை உணராத, கல்புக் குருடர்களான இந்த வஹ்ஹாபிகள் மேலாம்பரமான அவுலியாக்களது அத்தகைய இஸ்த்திகாதா (ரட்சிப்பு), இஸ்த்திம்தாது (உதவி தேடுதல்) முதலியனவெல்லாம் கிடையவே கிடையாது, அவை தப்பான போக்காகும் என்று அவைகளை நீக்கி நிராகரித்து, கெட்டுச் சீரழிந்து போனார்கள் என்று ஸாம் வலி நாயகம் (றலி) அவர்கள் வலியுறுத்திக் குறிப்பிட்டுள்ளார்கள். மேலும், அவர்கள் தொடர்ந்து அறிவித்துள்ளதைப் பாருங்கள்.

அகப் பார்வை யுள்ள ஷெய்கவரை
அல்பு வருஷமாந் தொலை தூரத்தில்

உகப்பு மிகவுள்ள முரீ திருந்தே
ஊணிக் கூப்பிட்ட போதிலுந் தான்

அகத்திய மாக அறிவா ரென்றே
அழகாங் கிதாபினில் வந் திருக்க

பகையாம் வஹ்ஹாபி யான வர்கள்
பாங்கல்ல வென்று கெட் டார்களே. (4)

[அல்பு = ஆயிரம். ஊணி = ஊன்றுதலாய். அகத்தியமாய் = தவருமல் கண்டிப்பாக. பாங்கல்ல = இணக்கமானதல்ல.]

அவுலியாக்களில் தலைசிறந்த, தென்னாட்டில் தீன் பயிர் விளைத்த, ஹளரத் ஸதகதுல்லாஹ் அப்பா (றலி) அவர்கள், தங்களது 'யாகுத்பா' மாலையில், ஹளரத் முஹியியித்தீன் அப்துல்காதிர் ஜீலானி (றலி) அவர்களைப் புகழ்ந்து கூறி, அவர்களிடம் இரட்சிப்பு, உதவி தேடி, "முஹியியித்தீன் ஆண்டகையவர்களே! தங்களது மேன்மை மிக்க திருநாமத்தை எவனொருவன் தனித்து, மன ஊன்றுதலுடன் ஆயிரம் தடவை சொல்லி அழைத்தானே, நான் உடனே அவனுக்குப் பதில் சொல்வேன், சமூகம் கொடுத்து காப்பாற்றுவேன் என்று திருவாய் மலர்ந்தருளினீர்கள்" என்று குறிப்பிட்டுள்ளார்கள். இதுபோல எண்ணற்ற மேதைகள், நூற்றுக் கணக்கான கிரந்தங்களில் 'அவுலியாக்களிடம் உதவி தேடலாம், உதவி தேடினல் இரட்சிப்பு கிடைக்கும்' என்று குறிப்பிட்டுள்ளார்கள்.

ஸதக்கத்துல்லாஹ் அப்பா (றலி) அவர்களின் அருமைத் தம்பி ஸாம் ஷிஹாபுத்தீன் (றலி) அவர்களும் இதையே, "அகப் பார்வையுள்ள ஷைகுமார்களை ஆயிரம் வருஷம் ஒரு மனிதன் தொடர்ந்து நடந்தால் எவ்வளவு தொலை தூரம் போய்ச் சேருவானே அவ்வளவு நெடுந் தூரத்திலிருந்து அழைத்தாலும் சரியே, தங்களது முரீதின் அழைப்புக்கு அந்த ஷைகுமார்கள், அவுலியாக்கள் அவசியம் சமுகங் கொடுத்து ரட்சிப்பார்கள், முரீதுகளின் இவ்வழைப்பை அவர்கள் அறிவார்களோ அல்லவோ என்ற சந்தேகத்திற்கே இடமே இல்லை. அகத்தியமாக — அதாவது, தவருமல் கண்டிப்பாக அவர்கள் அறிந்தே தீருவார்கள். இவ்வுண்மை விபரங்கள் பாரதூரமான ஸுன்னத்து-வல்-ஜமாஅத்து



கிதாபு, கிரந்தங்களில் ஏராளம் வந்திருக்க அவைகளெல்லாம் தகுதியல்ல, இணக்கமல்ல என்று இந்த வஹ்ஹாபிக் கூட்டத்தார்கள் கூறிக் கெட்டு-நாசமாகி-கராபாய்ப் போனுர்கள். ஒவ்வொரு அடிகளிலும் கெட்டார்களே எனவும், ஈமான் மாறி வேறு சாதியாய்ப் போனுர்களே எனவும் அப்பா அவர்கள் குறிப்பிடுவதை நோக்கும்போது இந்த வழிகெட்ட வஹ்ஹாபியாக்களை, தாங்களும் கெட்டு மற்றவர்களையும் வழிகெடுக்கும் இந்த அகமியம் உணராத அறிவிலிக் கூட்டத்தார்களை பெரிதும் வெறுத்து, பதுவாச் சாபம் செய்து முனிந்திருப்பதாகத் தோற்றுகிறது.

இத்தகைய கூட்டத்தார்களுடன் ஸுன்னத்-வல்-ஜமாஅத் கூட்டத்தார்கள் சேர்ந்து உறவாடலாமா, அதனுல் பரவாயில்லையா என்ற பிரச்சினைக்கும் ஸாம் ஷிஹாபுத்தீன் அப்பா (றலி) அவர்கள் "**பகையாம் வஹ்ஹாபியானவர்கள்**" — என்று குறிப்பிட்டு இந்த வஹ்ஹாபிக் கூட்டத்தார் அல்லாஹ்வுக்கும், றஸூலுக்கும், மூமீன்களுக்கும் பகைவர்களாக இருக்கிருர்கள். ஆகவே, நீங்களும் அவர்களைத் தவிர்த்திருத்தல் வேண்டும் என்பதை ஞாபகமூட்டியுள்ளார்கள்.

முத்தி லூதித்த வோர் நபியொலியை
    மூமினனவன் தன் ஹாஜத்தில்
சத்த முடன் கூவி கேட்கிறது
    சாதி இசுலாமில் ஆமானதாம்
கத்தி யுளறிடும் வஹ்ஹாபிகள்
    கனத்த ஷிருக்காகு மென்று சொல்லி
புத்தி யிழந்து நல்லறிவு தன்னைப்
    புகுந்து விளங்காமல் கெட்டார்களே. (5)

அப்பா அவர்கள் பொல்லாத இந்த வஹ்ஹாபிகள்
மீது மேலும் சாடி, "மூமின்கள் முஸ்லிம்கள் தங்களது
நாட்ட தேட்டம் நிறைவேற, நபிமார்களிடமும், அவுலி
யாக்களிடமும் உதவி தேடுவது, சப்தமிட்டு அழைத்துக்
கேட்பது, தீனுல் இசுலாமில் அ னு ம தி க் க ப் ப ட் ட
ஆகுமான காரியமேதான் — இதை யு ணா ரா ம ல்
அவ்வாறு அழைப்பது, உதவி தேடுவது இசுலாத்
திற்குப் புறம்பான செயல் — கடுமையான ஷிர்க்காகும்
என்று அ ப வா த ம், பழி பேசும் இந்த வஹ்ஹாபி
களுடைய கூற்று அர்த்தமற்றது, —இவ்வாருக வாய்க்கு
வந்தபடியெல்லாம் உழறுகின்ற இந்த வஹ்ஹாபி
களுக்குக் கொஞ்சம்கூட புத்தியில்லை, உள்ள புத்தியும்
அவர்களுக்கு இதனுல் பறிபோய் விட்டது. காரணம்,
அல்லாஹ்வின் அவுலியாக்கள், ஷை கு மா ர் க ள்,
ஆ ரி பீ ன் க ள், அகத்தூய்மையுள்ள பெரியார்கள்
முதலிய நல்லடியார்களின் சமுகம் இவர்கள் புகுந்து
அவர்களது தொடர்பைத் தேடி "நீங்கள் அறியாதவர்
களாக இருப்பின் அறிந்தவர்களிடம் கேட்டுத் தெரிந்து
கொள்ளுங்கள்" என்ற திருமறைக் கட்டளைக்கேற்ப,
மெய்ஞ்ஞான அகமிய அறிவுடைய நாதாக்களிடம்
கேட்டு விளங்கத் தவறிவிட்டதுதான். எனவே, இந்த
வாய்ப்பை இழந்த அவர்கள் புத்தி தடுமாறிக் கெட்டுப்
போனுர்கள்" என்று குறிப்பிட்டுள்ளார்கள்.

மவுத்தான மூமின் பேர் களுக்கு
    பாத்திஹா கத்தம் ஓதுவது
ஸவுத்து அழகான நமது நபி
    சாற்றினு ரது வாகு மென்றும்
கவுத்து வமான பாவம் நீக்கி
    காட்சி பெறவே தான் தவாபு சேரும்
மவுத்தை படைத்தோனின் நபி சொன்னதை
    மாற்றி வஹாபிகள் கெட்டார்களே. (6)

[ஸவுத்து = குரல். கவுத்துவம் = வஞ்சகம்.
தவாபு = புண்ணியம்.]



பொல்லாத இந்த வஹ்ஹாபிகள் மவுத்தானவர்களது ஹக்கில் ஓதப்படும் பாத்திஹா கத்தம் முதலியனவற்றை நாயகம் (ஸல்) அவர்களது சொல்லுக்கு மாற்றமாக அதெல்லாம் ஆகாது; அதன் தவாபுப் புண்ணியம் அவர்களுக்குப் போய்ச் சேராது என்று பொய்யுரை பேசி பித்னு உண்டுபண்ணுகிருர்கள். ஆனுல், மவுத்தைப் படைத்த வல்லநாயனுடைய அருமை நபி (ஸல்) அவர்கள் அவ்வாறு ஓதுவது ஆகும், அதன் மூலம் மவுத்தாக்களுடைய பாவங்களும் மன்னிக்கப்படும், அதன் தவாபு பிரத்தியட்சமாய் அவர்களுக்குப் போய்ச் சேரும் என்று சொல்லி இருக்கிருர்கள். இந்த வஹ்ஹாபிகள் நபி (ஸல்) உடைய சொல்லுக்கு மாற்றம் பேசி கெட்டுச் சீரழிந்து போனுர்கள் என்று அப்பா அவர்கள் கூறுகிருர்கள்.

பெற்ற பிள்ளைக்கே அழகான பேர்
    பேணி யிடுவது ஸுன்னத் தாகும்
மற்ற அஸ்மாக்கள் அழகன் றியே
    மாரு யிடுவது மாற்ற மாகும்
உற்ற ஆண்பெண்க ளிருவ ருக்கும்
    உவந்து நத்தர்ஸா முஹியித்தீன் பேர்
பற்றி விடுவது ஷிருக்கா மென்று
    பாரில் வஹாபிகள் கெட்டார்களே. (7)

[அஸ்மாக்கள் = பெயர்கள். பற்றி = குறித்து.
பாரில் = உலகில்]

இந்த வஹ்ஹாபிகள் குழந்தைகளுக்குப் பெயர் விடும் விஷயங்களிலும் அவுலியாக்கள், நாதாக்கள் உடைய பெயர்கள் அழகுடையனவாகவும், சிறப்புடையனவாகவும் இருக்கத்தக்க, அன்னவர்களுடைய பெயர்களைக் குழந்தைகளுக்கு விடுவது கூடாது.

அப்படிச் செய்வது ஷிருக்காகும் என்று முறைதவறிப் பேசி, இவர்கள் கெட்டு நாசமாகிப் போனார்கள் என்றும் ஸாம் ஷிஹாபுத்தீன் (றலி) குறிப்பிடுகின்றார்கள்.

அல்லா தனைக்கொண்டும் றஸூலைக் கொண்டும்
 ஆன ஈமானி லிருப்போர் களை
பொல்லா பிதுஅத்தை செய்தேது வால்
 பொருத் தமிலாக் காபிர் முஷ்ரிக்காக்கி
நல்லா ரறிவதை தேடா மலே
 நட்டு மரம்போல நின்று கொண்டு
பொல்லா ங்குகுடி கொண் டவர்கள்
 புவியில் முஷ்ரிக்காய் கெட் டார்களே. (8)

[செய்தேதுவால் = செய்த காரணத்தால்.]

அல்லாஹ்வைக் கொண்டும், றஸூலைக் கொண்டும், ஈமானின் மற்றும் அம்சங்களைக் கொண்டும் அழகான ஈமான் அம்சத்திலிருப்போர்களை, பிது அத்தான செய்கை ஏதாவது செய்திட்டாலும் உடனே அதன் பொருட்டால் அந்த மூமின்களை, நீங்கள் காபிர்களா யாகிவிட்டீர்கள், முஷ்ரிக்கீன்களாயாகி விட்டீர்கள் என்று சற்றும் சிந்தனை செய்யாமல் கூறிவிடுகிறார்கள் இந்த வஹ்ஹாபிகள். மரமட்டைக்குச் சமானமான இவர்கள் நட்டின மரம் போல நின்று கொண்டு அகமிய அறிவுகளை நல்ல அறிஞர்களிடம் நாடி தேடிப் பெருமல் மோசம் போய் விட்டார்கள். பொல்லாங்கு என்ற பொல்லாங்கு, ஷர்ரு எல்லாம் இவர்களிடமே குடி கொண்டுள்ளன. உண்மை மூமின்களை முஷ்ரிக்கு என்று முட்டாள்தனமாகப் பேசித்திரியும் இவர்களே முஷ்ரிக் கீன்களாகி கெட்டுக்குட்டிச் சுவராகிப் போயினர் என்று அப்பா அவர்கள் குறிப்பிடுகிறார்கள்.



ஒளிவா முஹம்மது நபி யிரஸூல்
 உவப்பாம் ஷபாஅத்து குப்ரா வுக்கு
தெளிவாய் தனதாகு மென் றிறையோன்
 தெரிந்து சொன்னதை விளங் காமலே
நெளிவாய் நின்றுதான் யாவருக்கும்
 நெடியோ னுடியே கொடுப்பா னென்றே
எளிய முஸ்லிமைக் கெடுத்துச் சொல்லி
 இடறும் வஹ்ஹாபிகள் கெட்டார்களே. (9)

[ஷபாஅத்து குப்ரா = நாளை மஹ்ஷரில் X மூமின்களுக்காச் செய்யப்படும் பெரும் ஷபாஅத்து மன்றாட்டம். நெளிவாய் = கர்வத்துடன். நெடியோன் = இறைவன். இடறும் = ஆபத்தாக நின்று தடுக்கும்.]

ஷபீஉல் முத்னிபீன் (பாபிகளை மன்றுடிக் கரை சேர்க்கும்) அருமை நாயகம் முஹம்மது முஸ்தபா (ஸல்) அவர்களுக்கு அல்லாஹ் தனது தனிப்பெரும் கருணையின் மகிமையால் விசேஷமாக அளித்திருக்கும் மாபெரும் ஷபாஅத்து மன்றாட்டத்தை அளித் துள்ளான். (வலஸவ்ப யுஃதீக்க றப்புக-ப-தர்ளா) “உமது நாயன் உமக்கு நிச்சயம் கொடுப்பான்; நீர் திருப்தியடைவீர்” என்ற திருமறை (93:5) வசனம் நாயகம் (ஸல்) அவர்களது ஷபாஅத்தையே குறிப்பிடு கிறது. அநேகமான ஸஹீஹான ஹதீதுகளின் மூலமும் நாயகம் (ஸல்) அவர்களுடைய ஷபாஅத்து தரிபடுத்தப் பட்டுள்ளது.

அல்லாஹ்வுடைய ஹபீபாகிய நமது ஸர்தார் நாயகம் (ஸல்) அவர்களுக்கு அல்லாஹ் இந்தச் சிறப்பை கொடுத்திருப்பதை உணர முடியாத இந்தக் கல்புக் குருடர்கள், இதெல்லாம் சரியில்லை, அல்லாஹ் அவனுடைய நாட்டம் இருக்குமானுல் யாவருக்குமே அதைக் கொடுத்திடுவான், இதற்கு ஷபாஅத்து என்று

ஒன்று தேவையில்லை, அவ்வாறு நம்புவது மதியீனம் என்றெல்லாம், கல்பிலும் மூளையிலும் நெளிவு கோணல் பெற்ற இவர்கள், கர்வத்துடன் அதை நிராகரிக்கிறார்கள். அத்துடன் பாமர முஸ்லிம்களையும் ஷபாஅத்தை விட்டும் நிராசையாக்கி வைத்து நாயகம் (ஸல்) அவர்களது மஹப்பத்தைத் தடுத்து நிற்கும் அபாயகரமான ஆசாமிகளாக் நிற்கிறார்கள். இத்தகைய மோசமான போக்குடைய வஹ்ஹாபிகள் கெட்டு நாசமாகிப் போனார்கள் என்று ஸாம் வலி நாயகம் (றலி) அவர்கள் வருணித்துள்ளார்கள்.

ஆத மபுல்பஷர் அபுர்ரூஹு மேல்
அன்பாய் ஸலவாத்தை ஓதின தால்
மாது ஹவ்வாவின் மஹர் தனக்கு
மன்னா னாக்கினா னவரொ ளிவை
ஷீது நபிபிதா விரலிற் கண்டு
சிறப்பாய் முத்தியே கண்ணில் வைத்தார்
ஓதும் பாங்கில் பேர்கேட்ட வுடன்
உவந்து விரல்கண்ணில் வைப்பீர் களே. (10)

[அபுல்பஷர் = மனித குலத்தின் தந்தை ஆதம் (அலை) அவர்கள். அபுர்ரூஹு = ஆத்துமாக்களின் தந்தை நாயகம் (ஸல்) அவர்கள். மன்னான் = இறைவன்.]

சரீரத்தந்தை ஆதிபிதா ஆதம் (அலை) அவர்கள், ஹவ்வா (அலை) அவர்களை வாழ்க்கைத் துணைவியாக ஆக்கிக் கொள்வதற்கு, மஹ்ருவைக்க வேண்டியதற்காக, நாயகம் (ஸல்) அவர்கள்மீது ஸலவாத்து ஓதும்படி அல்லாஹ் கூறினான். அந்த நாயகம் (ஸல்) அவர்களது மகத்தான சிறப்பினைக் கேட்டு பாவா ஆதம் (அலை) அவர்கள் பெருமகிழ்வுடன் அவ்வாறே ஸலவாத்து ஓதினார்கள். அந்த நூரே முஹம்மதிய்யாவின் ஜமாலைத் தன்னில் வெளியாக்கி வைக்கும்படி



அவர்கள் இறைவனிடம் கோரிய போது அவர்களது இரு பெரு விரல்களிலும் அந்தப் பேரழகான நூர் முஹம்மதிய்யாவின் ஜமாலியத்தை வெளியாக்கினான். உடனே ஆதம் (அலை) அவர்கள் தங்களது விரல்களில் அதனைக் கண்டு இன்புற்று முத்தமிட்டு தங்களது இரு நேத்திரங்களிலும் தடவி முத்தி மகிழ்ந்தார்கள். அந்த நல்லின்பக் கண் குளிர்ச்சி வாழ்வைப் போற்றியே, பாங்கில் 'அஷ்ஹது அன்ன முஹம்மதர் ரஸூலுல்லாஹ்' என்று சொல்லக் கேட்டதும், இரு பெரு விரல்களையும் முத்தமிட்டு இரு நேத்திரங்களிலும் தடவி முத்தி மகிழ்ந்து கொள்ளப்படுகிறது. எவர் இவ்வாறு செய்து வருகிறாரோ அவர் ஒருபோதும் கண்ணிழந்த குருடராகமாட்டார் என்று நாயகம் (ஸல்) கூறியிருப்பதாகவும் ஹதீது உள்ளது. இந்த நஸீபை அனுபவிக்கவும், அதுபற்றிய அறிவைப் பெற்றுக் கொள்ளவும் கொடுத்துவைக்காத வஹ்ஹாபிகள் எந்தக் கதியிலாகியுள்ளார்கள் என்பதை அப்பா அவர்கள் அடுத்த பாடலில் தொடர்ந்து சொல்கிறார்கள்.

வைத்த வுடன் கண்ணில் நோயகன்று
வாகாம் ஒளிவுண்டாம் வஹ்ஹாபிகள்
ஷைத்தான் குணத்தினால் விரல் வைக்காமல்
சிதறி வெறுத்துப் பின் வைப்போர்களை
கைத்துப் படுத்தியே விலக்கல் செய்து
கத்தன் னபி தம்மை வெறுத்தார்களே
பைத்தா றொரு மூன்றில் பயணம் போன
பார நபி தம்மை வெறுத்தோர் கெட்டார் (11)

[சிதறி = உருப்படாமல் போய். கைத்துப்படுத்தி = வெறுப்புண்டாக்கி. கத்தன் = இறைவன். பைத்தாறொரு மூன்றில் = 63வது வயதில். பார = மேலாம்பரமான.]

பாங்கு சொல்லப் படும்போது, இவ்வாறாக நாயகம் (ஸல்) அவர்களது சிறப்பான பெயரைச் சொல்லக் கேட்டதும் இரு பெருவிரல்களையும் முத்த மிட்டு இரு நேத்திரங்களிலும் தடவி முத்தி முகந்து கொள்வதன் மகிமையை அறியாத வஹ்ஹாபிகள், ஷைத்தான் குணத்தினால் அதை வெறுத்துத் தாங்களும் உருப்படாமல் போனதுடன் செய்யக்கூடிய நல்ல மனிதர்களையும் அப்படிச் செய்வது விலக்காகும் என்று கூறி தடுத்து விலக்க முற்பட்டு இருக்கிறார்கள். உயிரி னும் இனிய நபி (ஸல்) அவர்களை உவந்து நேசிப் பதற்கு பதில் இவர்கள் வெறுத்து உதாசீனப்படுத்து கிறார்கள். அறுபத்தி மூன்றாம் வயதில் இறையடி சேர்ந்த மேலாம்பரமிக்க நாயகம் (ஸல்) அவர்களை வெறுத்து அற்பமாக மதிக்கும் இந்த வஹ்ஹாபிக் குழுக்கள் சீரழிந்து கெட்டுப்போய்விட்டார்கள் என்று ஸாம் வொலி நாயகம் (றலி) அவர்கள் கூறுகின்றார்கள்.

கூட்டம் கூடியே நபி மௌலிதை
குணமாய் ஓதின பேர்களெல்லாம்
நாட்ட முடன் நபி யுவப்புண்டாகி
நாளை ஷபாஅத்தைப் பெறு வார்களே
தேட்ட முடன் நல்ல பெரியோரெல்லாம்
தேடித் தேடியே ஓதி வர
மாட்டு மனிதராம் வஹ்ஹாபிகள்
மாறி விலக்கியே கெட்டார்களே. (12)

நாயகம் (ஸல்) அவர்களைப் புகழும் போதும், அவர்கள் திருப்பெயரைக் கேட்கும் போதும் உண்மை மூமினுக்குத் தனி இன்பம் பெருகுகின்றது. அத்தன்மை யில் அந்த அண்ணல் அஹ்மது நபி (ஸல்) அவர்கள் பிறந்த சுபசோபனச் செய்திகளைக் கொண்ட மவுலிது ஷரீபை ஆஷிக்கீன்கள், ஸாலிஹீன்கள் தனிப் பெரும்



இன்பமுடன் கூட்டம் கூட்டமாக, ஓதி வருகிறார்கள். அது எங்கெங்கு நடைபெற்றாலும் ஆவலுடன் அதைத் தேடித் தேடி, நாடி மகிழ்ந்து ஓதிவருகிறார்கள். நாதாக்களும், நல்லவர்களும், பெரிய மனிதர்களும் இவ்வாறாக மௌலீது ஷரீபை உவப்புடன் ஓதுவதன் மூலம் நாளை கியாமத்து நாளையில் அருமை நாயகம் (ஸல்) அவர்களது ஷபாஅத்தை அடையக்கூடிய நற் பாக்கியம் பெறுகிறார்கள். ஆனால், துற்பாக்கியவான் களான மனிதத்தன்மையிழந்த மாட்டுக்குச் சமமான இந்த வஹ்ஹாபிகள் அதற்கு நேர்மாறாக தாங்களும் மவுலிது மஜ்லிசுகளில் கலந்துகொள்ளாமல் கலந்து கொண்டிருப்பவர்களையும் குழப்பமான பேச்சுக்கள் பேசிக் கலைத்து விலக்கிக் கெட்டு சீரழிந்து போனார்கள் என்று அப்பா அவர்கள் குறிப்பிடுகிறார்கள்.

கெட்ட பிதுஅத்தாம் கருமங்களைக்
கேட்டு விலக்கியே வஹ்ஹாபிகள்
கட்டுப் பாடான வார்த்தைகளை
கலக்க வொட்டாமல் நீக்கி விட்டு
மட்டில் லாவாழ்வும் பரக்கத்ததும்
மறுமைதனில் வர அமல் செய்யாத
மட்டி மனிதராம் பேர்களெல்லாம்
மாறு செய்ததால் கெட்டார்களே. (13)

இமாம்களான பெரியோர்களும், முஹக்கிக்கீன் களான நாதாக்களும் ஆகும் என்று அனுமதித்திருக்கக் கூடிய நல்ல செயல்களையும், கெட்ட பிதுஅத்துக்கள் என்று தப்புக் கணக்குப் போட்டு அவற்றை நீக்கி விலக்கியும், ஈடு, இணை, மட்டு, எல்கையில்லாத சுவன வாழ்வையும், பரக்கத்தையும் நாளை மறுமை நாளையில் தேடித்தரக்கூடிய முஸ்த்தஹப்பான, முஹப்பத்தான நல்ல நல்ல அமல்களை இந்த மடத்தனமுடைய

வஹ்ஹாபிகள் நாடவும் மாட்டார்கள்; தேடவும் மாட்டார்கள்; ஏற்கவும் மாட்டார்கள். தாங்களே எல்லாம் தெரிந்தவர்கள் என்ற இறுமாப்புடைய இந்தக் கூட்டத்தார்கள் தங்களின் மாறுபாடான இந்தப் போக்கினுல் கெட்டு நாசப்பட்டுப் போய்விட்டார்கள் என்று ஸாம் ஷிஹாபுத்தீன் (றலி) உரைத்துள்ளார்கள்.

அடியார் நபிபேரில் ஸலவாத் ததை
அழகா யுரைத்ததா லவர் களுக்கு
நெடியோன் தரஜாத்தை மேலும் மேலும்
நீட்டி யுயர்த்துவான் சொன்னவர்க்கும்
படியிற் பாவத்தைப் பொறுத்து நன்மை
பத்தாய்க் கூட்டுவா னென்றிருக்க
கொடிய வஹ்ஹாபிகள் நபி தமக்கு
கொடுப்பதில்லை யென்று கெட்டார்களே. (14)

[நெடியோன் = இறைவன். தரஜாத் = அந்தஸ்துகள். படி = பூமி.]

அல்லாஹ்வின் அன்புக்குரித்தான நல்லடியாராம் அருமை நபி நாயகம் (ஸல்) அவர்கள் பேரில் அன்பு மிகக் கொண்டு ஸலவாத்தை உரைக்க, உரைக்க அவர்களுக்கு அல்லாஹ் மென்மேலும் தரஜாத்து அந்தஸ்துகளை உயர்த்தி அருளுகிறுன். ஸலவாத் சொன்னவர்களுக்கும் அவனது தனிப்பெரும் கருணை கொண்டு உலகில் பிழைகளைப் பொறுத்து, நன்மைகளை ஒன்றுக்குப் பத்தாக்கி அருள்வான் என்று இருக்கத் தக்க, கொடிய குணம் படைத்த இந்த வஹ்ஹாபிகள் அப்படி எல்லாம் கிடையாது என்று உண்மைக்கு மாற்றம் பேசி கெட்டு குட்டிச்சுவராகிப் போய்விட்டார்கள் என்று அப்பா அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள்.



இந்த வஹ்ஹாபிகள் வார்த்தைகளை
எடுத்து நடவாமல் அவ்லியாக்கள்
வந்த பாதையில் நாம் நடந்து
வரிசைப் பதிசெல்ல அமலும் செய்து
கந்த முளநபி மன்ருட்டத்தைக்
கண்டு தரிசனைப் பேரின்பத்தை
அந்த முளநாயன் தந்திடவே
அன்பாம் முஸ்லிம்கள் துஆ செய்வீரே. (15)

[வரிசைப்பதி = சொர்க்கம். கந்தம் = நறுமணம். அந்தம் = அழகு.]

**அன்பு நிறைந்த அருமை முஸ்லிம்களே!**

மேலே குறிப்பிட்டுக் காட்டிய கெட்ட வஹ்ஹாபிகளின் வார்த்தைகளை எல்லாம் இலட்சியம் செய்யாதீர்கள். அவர்களின் உளறுதல்களை எல்லாம் காதில் போட்டுக்கொள்ளாதீர்கள். அவர்களுடைய பொல்லாங்கான அத்தகைய சொல்லும், செயலும் அவர்களோடு இருக்கட்டும். ஆனுல், நாமோ இறைநேசச் செல்வர்களான அவுலியாக்கள் எந்தப் பாதையில் தாங்களும் நடந்து அன்பர்களான நாமும் அவ்வாறே நடக்க வேண்டுமென்று விரும்பினுர்களோ அந்தப் பாதையில், ஸுன்னத்து-வல்-ஜமாஅத்தார்களுடைய பாதையில் நாமும் நீங்களும் நல்வழி நடந்து, சுவன பாக்கியங்களை அடைவதற்குரித்தான நற் புண்ணியங்களைச் செய்து, காதவழி கஸ்தூரி மணம் கமழும் அண்ணல் அஹ்மது நபி (ஸல்) அவர்களுடைய ஷபாஅத்து என்னும் மன்ருட்டத்தையும், அவர்களுடையவும் ஏகவல்ல றப்புல் ஆலமீன் உடையவும் திவ்விய (லிகா) தரிசனைப் பேரின்பப் பாக்கியத்தையும் நாம் அடைந்து கொள்ளக்

கூடிய நல்ல நஸீபை அல்லாஹ் நமக்கும், நுங்களுக்கும் தந்தருள்வானாக! ஆமீன்!

அன்புடைய முஸ்லிம் சகோதரர்களே! இத்தகைய நல்ல நஸீபுகள் குறைவின்றி நமக்குக் கிடைக்கும்படியாக நீங்கள் துஆச் செய்வீர்களாக! ஆமீன் என்று அப்பா அவர்கள் சிறப்பான தங்கள் முபாரக்கான இந்தப் போதனையைக் கூறி முடிக்கிறார்கள்.

எல்லாம் வல்ல றஹ்மான், நமதருமை நாயகம் (ஸல்) அவர்களும், அவர்களது அருமைத் தோழர்களும், அவுலியாக்களும் சென்ற நல்வழியில் நாமும் இனிதே நடந்து ஈடேற்றம் பெறுவதற்கு நல்லருள் பாலிப்பானாக. ஆமீன்! ஆமீன்!! யாறப்பல் ஆலமீன்!!!

———

> அன்பர்களே!
>
> வஹ்ஹாபியக் கொள்கையை விட்டுப் பேணிப் பாதுகாத்து, ஸுன்னத்துவல் ஜமாஅத்துக் கொள்கையில் நிலை பெற்று ஈடேற்றம் பெறுவதற்கு, உற்ற துணையாக உள்ள உயரிய நூல் இன்ஹாருல்-ஹக்கு "சத்தியப் பிரகடனம்" என்ற பிரசுரம். அதைத் தாங்கள் அவசியம் வாங்கிப் படிக்குமாறு வேண்டுகிறோம்.

ஹிலால் பிரஸ், திருநெல்வேலி—6